# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



கிராமங்களுக்குச் சேவை செய்வது சுயராஜ்யத்தை நிலை நிறுத்துவதாகும். இதைத் தவிர மற்றவையெல்லாம் சோம்பேறித் தனமான கனவேயன்றி வேறில்லை.

- காந்தியடிகள் .

2000

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2031 மாதம் : புரட்டாசி

மலர் : 12 இதழ் : ௨௨


## உண்மையான அஞ்சலி!

மகாத்மா காந்தி பிறந்தநாள் விழா. காந்தியின் சிலைக்கு மாலை அணிவித்துவிட்டு, அவரின் கொள்கைகளை நாம் குழிதோண்டிப் புதைத்துவிட்டோம். கைவிரலால் நூல் நூற்று உடுத்திய ஆடை இந்தியாவின் மானத்தைக் காத்தது என்று நம்பினார். கரை ஓரத்தில் விற்கவந்தவன் நாட்டையும் விலைக்கு வாங்கிவிட்டான். கூட்டுறவே நாட்டுயர்வு என்றார் மகாத்மா காந்தி. இன்று கூட்டுறவுப் பொருளாதாரம் நொண்டியடித்துக் கொண்டு இருக்கிறது. தொழிற் கூட்டுறவுத் துறையை ஊட்டி வளர்க்கவேண்டிய அரசு, காலில் போட்டு மிதித்துக் கொண்டிருக்கிறது. மூட்டைப்பூச்சிக்குப் பயந்து வீட்டைக் கொளுத்திய கதைபோல எங்கோ சில போலிக் கூட்டுறவு சங்கங்களில் ஊழல் என்ற காரணத்திற்காகக் கூட்டுறவு உற்பத்திப் பொருள்களுக்கு இருந்த நியாயமான கொள்முதல் முன்னுரிமையை ரத்துசெய்துவிட்டது. முழுக்க முழுக்க வெள்ளை வாணிகம் நடத்தும் தொழிற் கூட்டுறவு சங்கங்கள் ஒளிவு மறைவு வியாபாரம் நடத்தும் தனியார் துறையுடன் பொது ஏலப்போட்டியில் எப்படிப் போட்டியிட முடியும்? பொதுமக்களின் வணிகமாகிய கூட்டுறவுப் பொருளாதாரம் பெற்றிருந்த சலுகை முன்னுரிமையை ரத்து செய்ததன் மூலம் மிகப்பெரிய வீழ்ச்சியை தொழிற் கூட்டுறவுசங்கங்கள் சந்தித்துள்ளன.

இழந்த சந்தை வாய்ப்பை மீண்டும் பெற, கிராமப்புறப் பின்தங்கிய தொழிற் கூட்டுறவு சங்கங்களை வாழவைக்க-கூட்டுறவு சங்கங்களுக்கு உரிய கொள்முதல் முன்னுரிமையை மீண்டும் அளிக்க அரசு விரைவில் ஆணையிட்டுச் செயற்படுத்த வேண்டும்.

சாதி சமய நல்லிணக்கத்திற்காக நவகாளியில் நடந்தார் மகாத்மா! இன்று சாதியின் பெயரால் சமயத்தின் பெயரால் வெற்றிகரமாக அரசியல்வேரூன்றி வருகின்றது. அரிசன ஆலயப் பிரவேசத்தை வெற்றிகரமாக நடத்தி எல்லா மக்களின் உரிமைக்காகப் போராடிய இந்திய தேச விடுதலைப் போராளி துறவுச் சிங்கம் பசும்பொன் தேவர், தேசத்திற்குத் தம் வீட்டையே இழந்து செக்கிழுத்த செம்மல் வ உ.சி, ஏழைக்குழந்தைகளின் கல்விக்கண் திறந்த கர்மவீரர் காமராசர் என அனைவரையும் சாதி வளையத்துக்குள் வரவழைத்துவிட்டனர். விரல் நுனியால் நோற்ற ஆடைதந்து பாஞ்சாலியின் மானம் காத்த பரந்தாமன் போல மகாத்மாகாந்தி இந்தியமானம் காக்க நோற்ற விரல்கள் இன்று தோற்றுப்போய் நிற்கின்றன. சாதி சமயச் சண்டைகளிலிருந்து தமிழகத்தை மீட்பதும் கிராமிய கூட்டுறவுப் பொருளாதாரத்தை உயிர்ப்பிப்பதும் காந்திபெருமானுக்கு உண்மையான அஞ்சலியாகும்-

பொன்னம்பல அடிகளார்

---

கடவுளை வேண்டுதல், வேண்டாமையில்லாப் பண்புகளில்தான் வழிபடமுடியும். வழிபாடு என்பது வார்த்தைகளால் செய்வதல்ல. வாழ்க்கையில் செய்வதாகும். துன்பத்தின் நுழைவாயில் வேண்டுதலும் வேண்டாமையுமே! அந்த வழி அடைக்கப்பெறு மானால் வாழ்க்கையில் துன்பமில்லை! இன்பமே!

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்

---

# மனித நேயம்

''வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்'' என்றார் வள்ளற்பெருந்தகை! வாடிய பயிரைக் கண்டு தன் வளமார் தேரை நல்கினான் பறம்புமலைப் பாரி! ''ஊன் உடலம் பெற்ற மானுடத்திற்குத் தொண்டு செய்! அதுவே இறைவழிபாடு'' என்றார் திருமூலர்! ''ஊருக்கு உழைத்திடல் யோகம் பிறர் நலம் பேண வருந்துதல் யாகம்!'' என்றார் பாரதி! ''மண் மீதுள்ள மக்கள் பறவைகள், விலங்குகள், பூச்சிகள் யாவும் என் வினையால் இடும்பை தீர்த்தே இன்னருள் பெறவேண்டும்!'' என்று இறைவனிடம் மன்றாடினார் பாரதி!

இந்த மனிதகுல நேயம் என்ன ஆயிற்று? காற்றில் கரைந்த கற்பூரமாய்க் கரைந்து காணாமற் போயிற்று! அறம் வளர்த்த அன்னசாலைகளும் விருந்தோம்பிய வீட்டுத்திண்ணைகளும் என்ன ஆயின? இன்று மனிதன் இருக்கிறான்! மனிதத்தை இழந்துவிட்டான்! மனிதன் என்ற பெயரோடு வாழ்கிறான்!

அண்டங்களும் கண்டங்களுமாக விரிந்து கிடக்கின்ற உலகத்தில் உலகம் தழுவிய மானுடத்திற்காக உரக்கச் சிந்தித்தது தமிழினம்! இன்று உலகம் உள்ளங்கை அளவிற்கே சுருங்கிவிட்டது! மனித இதயமும் சுருங்கிவிட்டது! வளர்ந்த சிற்றுண்டிச் சாலைகள், காவல் மன்றங்கள், நீதிமன்றங்கள் எதை அடையாளம் காட்டுகின்றன? மனிதஉறவுகள் பணவயப்பட்டுப் போனதைத்தான் காட்டுகின்றன! கூட்டுக் குடும்ப வாழ்க்கை இன்று சிதைந்து போய்விட்டது. நுகர்வுக் கலாச்சார வாழ்க்கை வறுமையை உருவாக்குகின்றது. நுகர்வின் வீரியம், உழைக்காமல் பொருளீட்டும் வாழ்க்கை. நீதி மன்றங்களில் வழக்குகளை அதிகரிக்கச் செய்கின்றன! வன்முறைப் போக்கு வளர்கின்றது!

வன்முறை, உலகின் எந்த மூலையிலும் வெற்றி பெற்றதாக வரலாறு கிடையாது. இரண்டாம் உலகப்போரினால் ஏற்பட்ட அழிவுகளைத் தடுத்து நிறுத்தியிருந்தால் ஐயாயிரம் மக்கள் வசிக்கின்ற கிராமம் ஒவ்வொன்றுக்கும் ஒரு பொது சுகாதார மருத்துவ மனையைக் கட்டித்தரலாம். உலகெங்கும் வாழக் கூடிய ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஐந்து அறைகள் கொண்ட வீடுகள் கட்டித்தரலாம் என்று அறிவியல் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. வன்முறையை நாடாத நாடே வளமான நாடாக விளங்கமுடியும்.

—பொன்னம்பல அடிகளார்

நன்றி : சமயவாழ்வு

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 600 | ரூ. 6000 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## இதழ் கட்டணம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுக்கட்டணம் | ரூ. 40-00 |
| ஆயுட்கட்டணம் | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி

நிர்வாகி,
மக்கள் சிந்தனை
குன்றக்குடி-630 206

ஆசிரியர் :
மரு. பரமகுரு

அச்சிட்டு வெளியிடுவோர் :
சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி

# கண்டு கொண்டேன்

(காப்பியக்கவிஞர் நா. மீனவன்)

பெரியானைத் திருமுறைகள் பேணு வானை,
பெம்மானைக் குன்றைநகர்ப் பெருமான் தன்னை,
அரியானை, அறிவினிலே மிக்கான் தன்னை,
ஆண்டானை, திருக்குறள்தாம் அறிவான் தன்னை,
கரியானை உரிபோர்த்த கடவு ளானைக்
கைதொழுது நினைப்பானை, கருத்தே பேசித்
தெரியாத பொருள்விளக்கும் தேவன் தன்னைத்
திருக்குன்றாக் குடிகண்டேன் தினமும் நானே.

மருந்தனைய குறள்வழியை மதிப்பான் தன்னை,
மன்றமதை உரைவீச்சால் மயக்கும் தேவை,
இருந்தமிழர் தொழுதேத்த இருப்பான் தன்னை,
இனியதமிழ்த் தாய்வாழ ஏற்றம் கண்டு,
வருந்தானை முதல்நிற்கும் வலியோன் தன்னை,
வான்முடிமேல் தலைப்பாகை வனைந்தான் தன்னை,
பெருந்தகையை, உயர்குன்றக் குடியை என்றும்
உவப்பானைக் கைதொழுதேன் உவந்து நானே.

செங்கமலப் பூவெழுந்து திகழும் பொய்கை
சிறந்துறையும் குன்றைநகர்க் கோமான் தன்னை,
மங்கையிடம் கொண்டவனை மதித்த சீர்த்தி
மாமுனிவன் அகத்தியன்போல் வந்தான் தன்னை,
அங்கமெலாம் தங்கநிறம் கொண்ட வேலன்
அருள்குன்றாக் குடிமடத்தை ஆண்டான் தன்னை,
சங்கநறுந் தமிழ்முழக்கும் சால்பி னானைச்
சத்தியத்தை ஆலயத்தில் கண்டேன் நானே.

சீராரும் செந்தமிழே சொல்வான் தன்னை,
செய்யதமிழ் அறிஞர்சொல் கேட்பான் தன்னை,
ஏராரும் குன்றைநகர்க் குமர வேளை
என்றென்றும் பணிகின்ற இருகை யானை,
தேரேறும் பெருமானை வருக என்றே
திருமடத்திற்(கு) அழைத்துவக்கும் தெய்வம் தன்னை
போராடித் தமிழருக்குப் பொலிவு தந்த
புண்ணியனை ஆலயத்துட் கண்டேன் நானே,

நிறைகுணத்தான், தமிழாகி நின்றான் தன்னை,
நெஞ்சுவக்கத் தமிழ்ச்சங்கம் கண்டான் தன்னை,
மறையான திருக்குறள்நூல் மறவான் தன்னை,
மாணிக்கம் போல்வண்ண மயிலில் ஏறும்
இறையானைத் தான்மறவா இதயத் தானை
எங்கள்குன்றக் குடியடிகள் என்று சொல்லும்
முடியானை, தமிழ்க்கடலை, ஞானம் என்னும்
முடியானை, ஆலயத்துட் கண்டேன் நானே.

பாடுகின்ற புலவருக்கும் அறிஞ ருக்கும்
பட்டோடு பரிசளித்த பண்பன் தன்னை,
ஆடுகின்ற கூத்தருக்கும் அன்பி னாலே
அரியதிரு முறைபாடும் அடிய ருக்கும்
கூடுகின்ற திருச்சபையில் விருது தந்து,
குடிகாக்கும் அடிகளினைக் குவல யத்தே
நாடிநலம் காண்கின்ற நல்லோன் தன்னை,
நான்குன்றாக் குடிகண்டு கும்பிட் டேனே.

---

## கல்வி

"எல்லாக் கல்வியின் நோக்கமும் மனிதனை உருவாக்குவதாக இருக்கவேண்டும். கல்வியின் நோக்கம் ஒழுக்கம்" **—விவேகானந்தர்**

"கற்காமல் இருப்பதைவிட, பிறக்காமல் இருப்பதே நல்லது. ஏனெனில் அறியாமைதான் தீவினையின் மூலவேர்" **—பிளேட்டோ**

"கல்வியே ஆன்மாவின் உணவு, அஃதின்றேல் நம் சக்திகள் எல்லாம் ஸ்தம்பித்து நின்றுவிடும் பயன் தரா" **—மாஜினி**

"அறிவியலில் புதிதாக வந்த நூல்களையும் இலக்கியத்தில் பழமையானவற்றையும் படிக்க" **—லிட்டன்**

"கல்வி தொடர்ந்து கற்க வேண்டிய ஒன்று"
**—தவத்திரு குன்றக்குடி அடிகளார்**

---

# நாள் ஒரு நயம்-9

(தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல) அடிகளார்

இன்றைய கல்வி உலகக் கலாசாரத்தில் கல்வி, குழந்தைகளுக்கு ஊட்டப்படுவதில்லை; திணிக்கப்படுகிறது! வீட்டு வாயிலில் பேருந்து வந்து நிற்கிறது! ஓட்டுநர் ஒலிப்பானை இரண்டு மூன்று முறை தட்டுகிறார்! ஒலிப்பானின் அலறலில் குழந்தைகள் அலறி அடித்துக்கொண்டு ஓடிச்செல்கின்றனர். புத்தகப் பொதி கனக்கிறது! கழுதைகள் சுமப்பதைக் குழந்தைகள் சுமந்து செல்கின்றன. குழந்தைகள் பள்ளி சென்றபின் கணவனை அலுவலகம் அனுப்பி வைத்துவிட்டு அம்மா படிக்கின்றாள்!

புத்தகம் ஒரு கையிலும் சமையல் ஒரு கையிலுமாகச் சமையல் தொடர்கின்றது! என்ன அதிசயமாக இருக்கின்றது! அம்மா ஏன் படிக்கின்றாள்? பதவிஉயர்வுக்கு அல்ல!வேலைக்குச் செல்வதற்கும் அல்ல! பிறகு, அறிவு விருத்திக்கு இருக்கலாமோ? அறிவை விரிவாக்கக் கல்லூரிப்பாடம் கட்டாயம் இல்லையே! பின் ஏன் படிக்க வேண்டும்? அடுத்த ஆண்டில் குழந்தைகளை ஓர் உயர் ஆங்கிலக் கல்விக் கூடத்தில் சேர்க்கவேண்டுமாம்! அந்தக் கல்விக் கூடத்தில் பிள்ளைகள் படிக்கவேண்டுமானால் பெற்றோர்கள் பட்டதாரிகளாக இருக்கவேண்டுமாம்! அதுதான் அம்மா விழுந்து விழுந்து படிக்கிறாள்! பிள்ளைகளை பட்டதாரி ஆக்கவேண்டிய கல்வி நிலையம் முதலில் பெற்றோர்களைப் பட்டதாரிகள் ஆக்கிவிடும் போலும்! என்ன ஆபூர்வ சாதனை?

குழந்தைகள் வீடு திரும்புகின்றனர். மீண்டும் இப்பொழுது படிப்பு! Home work! போதும், போதும்! விரல்களை ஒடித்தும் மூளைகளைப் பிழிந்தும் விடுவார்கள் போலும்!

கிண்டர் கார்டன் முறை, குழந்தைகளுக்கு மென்மையாகக் கல்விபுகட்டத் தோன்றிய துறை! படம், பொம்மை பார்த்து உலகைச் சுற்றி நடப்பதைப் பார்த்துக் குழந்தையைக் கற்க வைத்தல்! இல்லை, கற்பது எப்படி என்பதைப் புரியவைத்தல்! மென்மையான ரோஜா இதழ்களைப் பேணுவது போல், குழந்தைகளிடம் கற்கும் முறையை உணர்த்துவதுதான் கிண்டர் கார்டன் முறை. ஆனால் அது, இன்று பிஞ்சு மழலைகளைக் கசக்கிப் பிழியும் இயந்திரங்களாக மாறிவிட்டன! பெற்றோர்களுக்கு, இப்படிக் கற்றால்தான் தங்கள் குழந்தைகள் அறிவு ஜீவிகளாக மாறுவர் என்ற நம்பிக்கை!

அன்புள்ள பெற்றோர்களே! அப்துல்கலாமும், சர்.சி.வி. இராமனும் டாக்டர். இராதாகிருஷ்ணனும் எந்தப் பள்ளியில் பயின்றார்கள்? நம் நாட்டில் தெருவிளக்கில் படித்தும் மேதைகளானோர் உண்டு! குழந்தைகளுக்கு எல்லாவற்றையும் கற்றுக்கொடுங்கள்; அதில் நாம் குறுக்கே நிற்கவில்லை! ஆனால் அவர்கள் ரோஜா இதழைப்போல மென்மையானவர்கள். முதலில் அவர்களுக்கு இதயத்தைக்கொடுங்கள்! அன்பைக் கொடுங்கள்! இதைத்தான் சோவியத்சிந்தனையாளர் சுகோம்லின்ஸ்கி கூறினார். ''குழந்தைகளுக்கு இதயத்தைக் கொடுப்போம்!'' என்று!

(9-1-2000 இல் மதுரை வானொலியில் ஒலிபரப்பானது)



---

# அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள் நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடை போடும் 'மக்கள் சிந்தனை' மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச்சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை' இதழுக்கு வழங்கி ''மக்கள் சிந்தனை' மக்களின் சிந்தனைகளை அகம் கொண்டு வெளிவர உதவுங்கள். ''மக்கள்சிந்தனை'' யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்! இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

—ஆசிரியர்

---

# "அருளாலய அறிவியல்"

(தமிழாகரர் தெ. முருகசாமி)

"அறிக அறிவியல்" என்ற
அரியதோர் மந்தி ரத்தை
அறிமுகம் செய்து வைத்தார்
ஆரெனக் கேட்பீ ராயின்
ஆறுமுகா சண்முகா என்றும்
அரோகரா அரோகரா என்றும்
கூறுகிற கூட்டம் கூடும்
குன்றக்குடி அடிகளா ரத்தின்.

தென்னைமரத் தோப்புச் சூழ்ந்த
தேரோடும் தெற்கு வீதி
புன்னைமலர் மணத்தைக் கொண்டு
பூங்காற்று வீசு தல்போல்
அன்னைத்தமிழ் வருடும் ஆன்ற
ஆதீன முகப்பின் முன்னர்
பொன்னைநிகர் அருளா லயத்தில்
போந்துவாழ் அடிகள் என்பேன்!

உட்புற ஆல யத்துள்
உருஅரு வான லிங்கம்
கட்புலன் காண ஆங்கே
கருத்தினை ஈர்த்து நிற்கும்
பெட்புறும் மற்றைப் புலன்கள்
பேசாமல் பெட்டிப் பாம்பாய்
உட்குடன் ஒடுங்க எந்தன்
ஓர்நாதான் பேசிற் றம்மா!

மாசிலா மனத்தின் அப்பர்
மன்னுதமிழ் ஆண்ட வனையே
பேசாத நாட்க ளெல்லாம்
பிறவாநாள் என்றல் போலப்
பேசாமல் இருந்த துண்டோ?
பிறங்குதமிழ் அடிகள் தேவே!
கூசாமல் தங்கை யாலே
குறிப்பெடுக்கா நாளும் உண்டா?

ஓய்வின்றி யிருந்த நீங்கள்
ஓரிடத்தில் ஒடுங்கிய தேனோ?
சாய்வின்றி யிருந்த நீங்கள்
சயனத்தில் இருப்ப தேனோ?
ஆய்வின்றி இல்லா நீங்கள்
ஆய்ந்தோய்ந்து இருப்ப தாலே
தாயின்றித் தவிக்கும் கன்றாய்த்
தரணியில் ஆனோம் நாங்கள்!

உருசிய நாட்டிற் குப்போய்
உழைப்பினை அறிந்து வந்தீர்!
பெருகிடும் தொழிலால் நாடு
பெருமையை அடையும் என்ற
உருகிய உள்ளத் தாலே
உன்னத குன்றக் குடியை
மருவிடும் ஆன்மிகத் தோடே
மாதிரிக் கிராமம் செய்தீர்!

அறிவியல்தான் ஆன்மீ கத்தின்
அச்சாணி என்றும் சொன்னீர்!
செறிவான காரைக் குடியின்
சிக்ரிக்குத் துணையாய் நல்ல
குறியாள ராகத் தோன்றிக்
குவலயத்தில் அறிவியல் தமிழின்
நெறியாளர் என்னும் பேரை
நிறைவாகப் பெற்றீர் அன்றோ!

முற்காலந் தன்னைத் தானும்
முன்னோர்கள் மூன்று வகையாய்
கற்காலம் என்றும் பின்னர்
கனிமமாம் காலம் என்றும்
பிற்காலம் பொன்னொடு வெள்ளி
பிறங்கிய காலம் போகத்
தற்காலம் பிளாஸ்டிக் என்று
தயங்காமல் கூறும் கால,

ஓட்டத்தில் வாழும் மக்கள்
ஓங்காரச் சொற்பொருள் உண்மை
நாட்டத்தில் நெஞ்சம் இன்றி
நிம்மதியும் இன்றி வாழ்க்கை

வாட்டத்தில் மிதக்கின் றார்கள்!
வாய்விட்டுச் சொல்லொண் ணாத
ஆட்டத்தைக் கண்டும் ஏனோ
அடிகளே! அமைதி யுற்றீர்!

என்றெந்தன் நாக்குத் தானும்
எடுத்துரைத்துக் கேட்ட போது
நின்றசொல் லழக ரான
நிறைபுகழ் அடிகள் என்னை
ஒன்றிய உள்ளத் தோடே,
ஓவியமாய்ப் பார்த்துக் கொண்டே
கன்றிய கனவில் சொன்னார்
கருத்தான அறிவியல் தன்னை!

அழிவுதான் மற்றொன் றிற்கு
ஆக்கத்தின் வழிய தாகும்!
பிழிவுதான் தேனீ கூட்டைப்
பீடுடன் சுவைக்கச் செய்யும்!
கழிவுதான் உடலின் தூய்மை
காட்டியே வாழ வைக்கும்!
ஒழிவிலாக் கலகந் தானே
ஓர் நாளில் காட்டும் உண்மை!

காரண காரி யத்தைக்
கச்சிதமாய் எடுத்துச் சொல்ல,
''வாரணம் போன்று வாழ்ந்த
வளர்குன்றை அடிகள் தேவே!
தோரணம் கட்டு கின்றோம்
தொய்வில்லா அறிவியல் தன்னைச்
சீரணம் ஆக்கிக் கொள்ள
சிந்தையை நும்பால் வைத்தே!''

என்றென்நா சொல்வ தற்குள்
சோதியாய் மறைந்து விட்ட
மன்றுபுகழ் அடிகள் தானும்
மாலிங்க வடிவில் மட்டும்
குன்றக்குடி இருப்பா ரில்லை!
கூறுதமிழ் உலகோர் கண்ட
அன்றுமுதல் அருளா லயத்தின்
அறிவியலாய் உள்ளா ரன்றோ!

# திருக்குறள் அஞ்சல்வழிக் கல்வி மையம்



திருக்குறளின் உண்மைப் பொருளை உணர்ந்திட!

''திருக்குறள் இளம் புலமையர்'' என்ற சான்றிதழ் பெற்றிட!

இன்றே சேர்ந்திடுவீர்!


திருக்குறள் அஞ்சல்வழிக் கல்வி மையம்
ஈசுவரி வணிக வளாகம்
2 சிந்தாமணி கடைவீதி
திருச்சிராப்பள்ளி - 620 002.

ச. சாமிமுத்து
முதல்வர்

சு. முருகானந்தம்
தலைவர்

குரு. கல்யாணசுந்தரம்
செயலாளர்

குறள்மொழி
பதிவாளர்

இரா. விஷ்ணுதாஸ்
பொருளாளர்

# அழகப்பா பல்கலைக் கழகம்

## பட்டமளிப்பு விழா

## 4—4—1994

## தவத்திரு குன்றக்குடி அடிகளார் உரை

அழகப்பா பல்கலைக்கழக வேந்தர் அவர்களே! துணைவேந்தர் அவர்களே! பேராசிரியப் பெருந்தகையர்களே! மாணவர்களே! திருவருள் துணையால் வாழிய நலத்துடன்; வளத்துடன்!

அழகப்பா பல்கலைக்கழகம் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்த வள்ளல் அழகப்பர் அவர்கள் அறிவைத் தேடுவதில், அறிவைத் தருவதில் ஆர்வம் மிக்கவர். பொதுவாக நகரத்தார் வட்டித் தொழில் செய்யும் இயல்பினர். தனி வட்டி என்ற வழக்கில், கூட்டு வட்டியே நடைமுறை. ஆனால் அழகப்பர் கொழுத்த வட்டி ஈட்டித்தரும் முதலீடு என்று கூறப்பெறும் ''கல்வியில் முதலீடு'' செய்தார். அருகில் உள்ள மத்திய மின்வேதியியல் ஆராய்ச்சி நிறுவனம் வள்ளல் டாக்டர் அழகப்பர் முயற்சியினாலும் முதலீட்டினாலுமே காரைக்குடிக்கு வந்தது. இன்று இந்த ஆராய்ச்சி நிறுவனம் நமது பகுதிக்கும் நாட்டிற்கும் செய்து வரும் தொண்டு அளப்பரியது. வள்ளல் டாக்டர் அழகப்பர் கொடையில், மழலையர் பள்ளி முதல் பல்கலைக் கழகம் வரையில் தோன்றி வளர்ந்தன; வளர்ந்து வருகின்றன. பல ஆயிரக்கணக்கான அறிஞர்களை நாட்டுக்குத் தந்துள்ள பெருமை, அழகப்பா கல்வி நிறுவனங்களுக்கு உண்டு.

''மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்''

என்ற திருக்குறளுக்கும்,

''இம்மைச் செய்தது மறுமைக்காம் எனும்
அறநிலை வாணிகன் ஆய்அலன்''

என்ற புறநானூற்று வரிகளுக்கும் வள்ளல் டாக்டர் அழகப்பர் இலக்கியமானவர்.

வள்ளல் அழகப்பர் புகழ் வளர்க! வாழ்க!

கம்பன் இலக்கிய உலகில் புதிய தடத்தைக் கண்டான்; அந்தத் தடத்தை நமக்கும் காட்டுகிறான். கம்பனுக்கு முன் அனைவரும் கடவுள் வெற்றிபெற்றார் என்றனர். சிலர் மன்னன் வெற்றி பெற்றனன் என்றனர். இலக்கிய உலகில் முதன் முதலில் ''மானுடம் வென்றதம்மா!'' என்று பாடுகின்றான் கம்பன்! ஆம்! மானுடம் வெற்றிபெறவேண்டும் என்பது கம்பனின் விருப்பம்; விழைவு.

''எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!''

என்று புறநானூறு கூறும்! மானுடம் வெற்றிபெறுதல் வேண்டு மெனில் மானுடத்தின் பொறிகளும் புலன்களும் தனிசிறந்து விளங்குதல் வேண்டும். மானிடர் அறிவுடையராதல் வேண்டும்.

''அறிவுடையார் எல்லாம் உடையார்''

என்பது திருக்குறள். சென்ற காலத்தில் மானுடம் வெற்றி பொருந்திய வரலாற்றை இயக்கிவந்தமையை வரலாற்றில் காண்கி றோம். இலக்கியங்களில் படிக்கிறோம். ஆயினும் மானுடத்தின் வரலாற்றில் ஏற்பட்டுள்ள பின்னடைவுகளை அலட்சியப் படுத்திவிட முடியாது. மானுடத்தின் வரலாற்றில் ஏற்பட்டுள்ள பின்னடைவுகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு இன்றைய தலைமுறை அந்த பின்னடைவுகளைத் தவிர்க்க வேண்டும். இஃதுஇன்றைய இளையபாரதத்தின் முன்னுள்ள கடமை.

இன்று நம்முடைய சமுதாயத்தை நாம் வழிநடத்திச் செல்ல வில்லை;செல்ல இயலவில்லை.ஏன்?இன்று நம்முடைய வாழ்க்கைப் போக்கின் அமைப்பினால், சமுதாயம் என்ற ஒன்றே இன்னமும் உருக்கொள்ளவில்லை. நாம் ஒரு கூட்டமாக வாழ்கிறோம். ஆனால் கூடித்தொழில் செய்து வாழவில்லை நம்முடைய நாட்டில் கூட்டுறவு போதிய வெற்றியைப் பெறவில்லை. நாம் ஒரு சமுதாயமாக வாழ முயன்றோம், இல்லை! காடுபோல வாழ்கிறோம்! தோட்டம் போல, தோப்புப்போல வாழ முயன்றோம். இல்லை. பன்னூறு ஆண்டு களாக எப்படியோ விளைந்த வேற்றுமைகள் மேலும் மேலும் வளர்கின்றன.

இந்தியா, நிலப்பரப்பால் ஒரு நாடுதான்! ஆனால், நாம் அனைவரும் இந்தியராகவில்லை. சாதிகள், மொழிகள், மதங்கள் ஆகியன நம்மை வேற்றுமைப் படுத்துவதில் - ஒருவருக்கொருவரை அந்நிய படுத்துவதில் போதிய வெற்றிகளைப் பெற்றே வருகின்றன. இது மறுக்கமுடியாத - வருந்தத்தக்க உண்மை.

நம்மை இந்தப் புவியில் - புவிக்கோளத்தில் நடக்கும் சம்பவங்கள் - நிகழ்ச்சிகள் நடத்துகின்றன. சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் நம்முடைய ஆளுமைக்குக் கட்டுப்பட்டனவாக இல்லை. புவி ஈர்ப்பு ஆற்றலால் பொருள்கள் கீழே விழுதல் போல, புவியின் நிகழ்வுகள் நம்மை இழுத்துச் செல்கின்றன; அல்லது ஆட்டிப் படைக்கின்றன. நாம் உணர்ச்சிவசப்படுகிறோம். நம்மை சுற்றிலும் நடக்கும் சம்பவங்கள் - நிகழ்வுகள் நம்மைக் கடுமையாகப் பாதிக்கின்றன. இந்த பாதிப்புக்களே நம்மை வழி நடத்துகின்றன; வாழ்தலுக்கும் காரணமாகின்றன. நாம் இந்தப் புவியை இந்தப் புவியின் வரலாற்றைத் திட்டமிட்டு நடத்தவேண்டும். புவியை நடத்துக! நடத்துக புவியை!

மானுடம் இந்தப் புவியை நடத்த அறிவு என்ற கருவியைப் பெற்றாக வேண்டும். அறிவை ''கருவி'' (Instrument) என்று திருக்குறள் கூறுகிறது. தகவல்களின் தொகுப்பு அறிவு அல்ல. அறிவு ஒரு கருவி. வாழ்க்கையைத் துன்பத்திலிருந்து பாதுகாக்கும் கருவி அறிவு.

''அறிவு அற்றம் காக்கும் கருவி''

என்பது திருக்குறள். இந்த அறிவைத் தேடவேண்டும். நல்லறிவு எந்த மூலையில் இருந்தாலும் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் தேடிச் சென்று அடைதல் வேண்டும். நபிகள் பெருமான் ''சீனத்திலாயினும் அறிவை அடையத் தவறாதே'' என்றார். அறிவு மனிதனை. மனித குலத்தைத் துன்பத்திலிருந்து துயரங்களிலிருந்து பாதுகாக்கும் கருவி என்பது திருக்குறள் கருத்து.

அறிவைப் பெறுதலுக்குரிய சாதனங்கள் பலப்பல. அவற்றுள் தலையாயது கல்வி. ''கற்க'' என்று திருக்குறள் கூறுகிறது. 'கற்க' என்பது எக்காலத்துக்கும் இயைந்து நிற்கும் ஆணைச் சொல். ''கற்க'' ''கற்றுக்கொண்டே இருப்பாயாக'' என்கிறது. கற்றல் என்பது ஒரு தொடர் பணி! இன்று பட்டம் பெறும் மாணவர்கள் தொடர்ந்து கற்கவேண்டும். வாழ்நாள் முழுதும் கற்க வேண்டும். ஆம்! ஒவ்வொருவரும் படைப்பாற்றல் மிக்க மனிதனாகும் வரையில் கற்க வேண்டும். கற்றல் என்பது நாள்தோறும் செய்யக்கூடிய இயல்பான பணி என்று கலித்தொகை கூறும். கற்க என்று அறிவுறுத்திய திருவள்ளுவர் ''கசடறக் கற்பவை கற்க'' என்று தொடர்ந்து கூறுகிறார். சிலர் கூறுவது போலப் பிழையின்றிக் கற்றலை ''கசடறக் கற்க'' என்று திருவள்ளுவர் கூறியிருக்காமட்டார். முன்னோடியான, வெற்றி பொருந்திய வாழ்க்கையை நடத்தவேண்டும். இதற்குத் தடையாகப்

பல குற்றங்கள் ஆன்மாவில் பொருந்தியிருக்கின்றன. நமது முன்னேற்றத்திற்குத் தடையாக ஆன்மாவிடத்தில் அமைந்துள்ள குற்றங்கள் எவை எவை என்று கண்டறிதல் வேண்டும். நற்சலுகையின்றி கண்டறிதல்வேண்டும். உடற்பிணி உணவாலும்மருந்தாலும் போகும். ஆன்மாவைச் சார்ந்தபிணி நல்ல நூல்களின் கருத்துக்களினாலேயே நீங்கும். நூலகத்தை ''உயிர் மருந்தகம்'' என்றழைப்பதும் உண்டு.

மாணவ நண்பர்களே! உங்கள் முன்னேற்றத்திற்குத் தடை வெளியே இல்லை. உங்களிடத்திலேயே தடையிருக்கிறது! தடைகளாக இருக்கும் குற்றங்களைக் கண்டுணர்க! அந்தக் குற்றங்கள் நீங்குதலுக்குரிய நூல்களைத் தெரிந்தெடுத்துக் கற்பீர்களாக! தொடர்ந்து கற்பீர்களாக! இங்ஙனம் தொடர்ந்து கற்கும் கல்வியே நமக்குத் துணை, நமக்கு பலம்! இலக்கியங்களில் படிக்கத் தக்கன பழைய இலக்கியங்கள்! அறிவியல் நூல்களில் படிக்கத்தக்கன புதிய நூல்களாகும்.

உண்ணும் உணவு உடலுக்கு வலிமையாதல் போல் கற்கும் கல்வி அறிவாகி, உணர்வாகி, ஒழுக்கமாகி செயலாகிப் பயன் தர வேண்டும் கற்கும் கல்வி மனிதத்தை உருவாக்குதல் வேண்டும். ஒரு காலத்தில் கல்வியே கூட பிரிவினைக் கருவியாக அமைந்தது. பிற்காலத்தில்தான் பிரிவினைகளை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர் ஆனால் இன்னமும் பூரண வெற்றி கிடைத்தபாடில்லை கல்வி அன்பையும் இன்பத்தையும் மானுடத்திற்குத்தரவேண்டும் அதுவே கல்வி கற்றலும் கேட்டலும் அறிவு பெறுதலுக்குரிய வாயில்கள்! நாள்தோறும் கற்றலும் கேட்டலும் உடையவர்களைப் பெரியோர் என்று திருஞானசம்பந்தர் போற்றினார்.

''கற்றல் கேட்டலுடையார் பெரியார்''

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு.

இன்றைய உலகம் சுருங்கிவிட்டது. ஆதலால் நமது கல்வியும் உலகந்தழுவியதாக அமைதல் வேண்டும். உலகந் தழீஇய ஒட்பம் நமக்குத் தேவை. நிறைய சாளரங்கள் உள்ள மாளிகை நல வாழ்க்கைக்கு ஏற்றது. உலகந்தழுவிய ஒட்பம் பெற மொழிகள் என்ற சாளரங்களைத் திறந்து விடுங்கள்! பலமொழிகளைக் கற்பது நல்லது. குறைந்தது நான்கு மொழிகளைக் கற்றவர்கள் பலவான்களாக விளங்குவர். மொழிச்சாளரங்களைச் சாத்திவிடாதீர்கள். ஒரு மொழியின் ஆதிக்கத்தை எதிர்ப்பதையும் அம்மொழியைக் கற்பதையும் ஒன்றாகக் கருதக்கூடாது. நமது தலைவர்கள் ஆங்கிலேயர்களுடைய ஆதிபத்தியத்தை எதிர்த்தார்கள்; ஆனால் ஆங்கிலத்தை துறைபோகக் கற்றிருந்தனர். ஆங்கிலேயர்கள் மெச்சும் அளவிற்கு ஆங்கிலம் பேசினார்கள். இது இன்றைய இளைஞர்களுக்கு முன்னுதாரணமாக அமையும் என்று நம்புகிறோம். (தொடரும்)

# 'மலைத்தேனில் ஒரு துளி"

''வேதியன்''

(ஆதீனப்புலவர் குன்றக்குடிக் கதிர்)

என் இனிய தோழி! வா வாயாரப் பாடுவோம். நான் ஏதோ அச்சத்தில் மூழ்கி இருப்பதால் அந்த அச்சத்தை மறக்க உன்னைப் பாட அழைப்பதாக எண்ணிவிடாதே. அது தனிவழியே செல்கின்றவர் செயல். என் உள்ளத்தில் பொங்கி எழும் இன்ப எழுச்சியை -மகிழ்ச்சியை-எங்கெழில் என் ஞாயிறு? என்கிறகவலையே இல்லாத பேரின்பத்தைப் பாடுவதன் மூலம் மேன்மேலும் பெருக்கிக் கொள்ளவே உன்னை அழைக்கின்றேன்.

தோழீ! யாரைப் பாடுவது? எதனைப்பாடுவது? என்று கேட்கிறாயா? புகழைப் பாடத்தான் உன்னை அழைக்கின்றேன்; பொருள்சேர் புகழை-மெய்ப்புகழை நாம் பாடும்போது கிடைக்கும் இன்பத்துக்கு ஈடேது? இணையேது? அந்த மெய்ப்புகழ் வெள்ளத்தில் படிந்து படிந்து திளைக்கும்போது நாமும் அப்புகழ் வடிவமாகவே ஆய்விடுகிறோமல்லவா? அதன் பொருட்டே உன்னை அழைக்கிறேன்,

யாருடைய மெய்ப்புகழைப் பாடுவது என்று நீ கேட்கலாம். ஆனந்தத் தேன் இருக்கும் பொந்தின் புகழ்பாட அழைக்கிறேன். மருந்தும் உணவும் ஆகும் உலகத்துத்தேன். இந்தப் பொந்துத் தேனும் அப்படித்தான். ''உலகத்துத் தேனை உண்பதாக நினைத்தால் இனிக்குமா? ஆனால் இந்தப் பொந்தும் தேனும் இரண்டுமே நினைத்தாலே இனிப்பன.

ஆனந்தத் தேனிருக்கும் அந்தப் பொந்தினைத் தென்னனுக்குரிய திருப்பெருந்துறையில் கண்ணால் யானும் கண்டேன். நினைத்தாலே இனிப்பதனைக் கண்ணால் காணவும் செய்தால் ஏற்படும் அந்த இனிமை மறக்க இயலாத இனிமை. நான்மட்டு மல்ல; நீ நினைத்தாலும் கூட இனிப்பது அது. அந்த இனிமையை நீயும் சுவைக்கவேண்டும் என்கிற எண்ணத்தால்தான் உன்னை அழைத்தேன்.

ஆனந்தத் தேனிருக்கும் அந்தப்பொந்து, குருமூர்த்தியாக வந்தது கல்லா மனத்துக் கடைப்பட்ட நாய் என்று என்னை ஒதுக்கிவிடவில்லை. அறிவிலாத எனைப் புகுந்து ஆண்டு கொண்டது; அறிவெலாம் புலமாக்கியது.

தோழீ! எனக்கு ஏதோ தகுதியிருக்கிறது என்று நீங்கள் நினைக்கலாம். என் தகுதியும் தகுதியின்மையும் உங்களைக் காட்டிலும் நானல்லவா நன்றாக அறிவேன்.

ஆம் தோழீ! கருங்கல் ஆக விளங்கும் மனம் என் மனம். கல் + ஆம் + மனம் என்னுடையது.

தோழீ! மற்றொருவகையில் பார்த்தால் என்மனம் மலங்கள் நிறைந்த மனம். அம்மலங்கள் தோண்டி எறியப்படாத மனம். கல்லா + மனம் (கல்லாமலம் = தோண்டி எறியப்படாத)

அம்மட்டோ! எங்கும் நிறைந்த திருவருளில் தோயக் கல்லா மனமும் கூட. கல்லா + மனமும் (கல்லா-திருவருளில் தோயக் கல்லாத)

வெட்கமின்றிச் சொல்கிறேன். என்நிலைமையை உன்னிடம் மட்டும் தானே கூறவியலும், பிறர்போல நாக்கடிப்பாக வாய்ப்பறை யறையாதவன் என்பதால் கூறுகிறேன். நான் கடைப்பட்டநாய்.

நாயின் இயல்புதான் உனக்குத் தெரியுமே,
தலைசாய்த்து நிழலில் படுத்துக்கிடக்கும் நாய். ஏதோ திடீரென்று கேளாதது கேட்பதுபோல் தலைநிமிர்த்திச் சுற்று முற்றும் பார்க்கும் எழும்; தலையை ஒரு சிலுப்புச் சிலுக்கும். நாலுகால் பாய்ச்சலில் ஒருதிசையில் ஓடும், எதையோ நோக்கி அது ஓடுகிறது என்று நினைப்பாய் அதுதானில்லை. ஓடிச்சென்றநாய் அங்கிருந்து மீண்டும் பழைய இடத்துக்கே வந்து நிற்கும்; நாக்கைத் தொங்க விட்டு உடல் சூட்டைக் குறைக்க முயலும். படுக்கும். ஓடியதே எங்கே ஓடியது? நோக்கம் என்ன? சாதித்தது என்ன? ஒன்று மில்லை; ஒன்றுமே இல்லை. இப்படிக் குறிக்கோளிலாது அலைந்து திரிவது நாய். இதுவே பெரும்பான்மை. மிகச்சில சமயங்களில் மட்டுமே சிலமட்டுமே விதிவிலக்காக அமைவன குறிக்கோளுடன் அமைவன.

அதுபோல் தான் நானும் என் நிலைமையும் - என்னைத் திருப்பெருந்துறையில் ஆட்கொள்ளும் வரை. என்மனமும் ஐம்புலன்களும் கண்டகண்டபடி ஓடித்திரிந்தன. பயனின்றித் திரிந்தன. திரிதலில் சாதனை ஏதும் நிகழ்ந்திருப்பின் என்பால் புத்துணர்வு பிறந்திருக்கும். சாதனை இல்லை. அதனால் புத்துணர்வும் இல்லை; களைப்பும் எய்ப்புமே எஞ்சின.

அந்த நாய்க்குத் தன் தலைவன் யார் என்றாவது தெரியுமா தோழி! தெரியாது. நேற்றுவரை தன்னைக் குளிப்பாட்டிக் கொஞ்சி சத்தான உணவுதந்தவன் இருக்க, யாரேனும் அதற்குப்பிடித்தமான உணவு போடும்போது உரியவன் தடுக்காவிட்டால் அந்த உணவையும் தின்னும்; அவனுக்கும் வாலாட்டும்; அவனைப் பின்தொடர்ந்து செல்லவும் செய்யும் இதற்கு விதிவிலக்காகச் சில நாய்கள் இருக்கலாம் எனினும் நாயின் பொதுப்பண்பு இது.

நானும் இதுபோல்தானடீ இருந்தேன் அன்றுவரை. என் அரிப்புக்குச் சொரிகின்றவரை எல்லாம் நம்பி வாலாட்டி அவர் பின் திரிந்தேன். என் உணர்ச்சிக்குத் தீனி போடுகின்றவர்களை எல்லாம் என் தலைவனாக எண்ணித் தலையில் தூக்கிவைத்துக் கொண்டு கூத்தாடினேன்

அந்த நாய்க்கு இருப்பது ஐந்தறிவு. எனக்கோ ஆறு அறிவு இருந்தும் கூட விதிவிலக்கான நாய்போல் கூட நான் நடந்து கொள்ளவில்லை. அதனினும் கடைப்பட்ட நாய்........

என்மீது அவனுக்கு பெருங்கருணை ஏற்பட்டுவிட்டது. ஆற்றல் மிக்க ஒருவர். ஒன்றினை செய்ய நினைத்தால் முடியவா முடியாது? போட்டுப்புரட்டி எடுத்தாவது நினைத்ததைச் சாதிக்காமல் விடமாட்டார். அவன் மட்டும் என்ன? எதில் குறைந்தவன்? சும்மா விடுவானா? அல்லது விட்டுவிட்டானா? எந்தவகையிலாவது தான் நினைத்ததைச் சாதித்துக் கொள்கிறவர்களை வல்லாளன் என்பாயல்லவா? தோழீ! அவனும் ஒரு வல்லாளன்தான்.

என்னைத்தன் வழிக்குக் கொண்டுவர அவன் என்னை அடித்தானா? உதைத்தானா? இல்லை இல்லை. நான் அறியாதவாறு என்னைப் பித்தனாக்கினான். எப்படிப் பித்தனானேன் என்பது எனக்கே தெரியவில்லை தோழீ! திடீரென்று பித்தனாக்கினான் என்று எண்ணிவிடாதே. அப்படி ஆக்கினால் என் நிலைமை பாழாய்விடும் என்பதால் கொஞ்சம்கொஞ்சமாகப் பித்தனாக்கினான் பித்து ஏற்றினான்.

தன் காந்தக் கண்களால் என்னைக்கூர்ந்து நோக்கினான். என் காதருகே தன் செவ்வாய்குறித்து ஓதினான். தன் வலக் கையால் என்னைத் தீண்டினான்; தன் திருவடியை என்தலை மீது வைத்தான்.

அவன் செய்த ஒவ்வொரு செயலும் என்பித்தை ஏற்றிக் கொண்டே சென்றன. ஒவ்வொரு செயலும் என்மீது பாதிப்பை உண்டாக்கியது.

வேதியியல் விஞ்ஞானிகளின்-வேதிவினையாளரின் - செயலை நீ கவனித்திருப்பாய் விடாக்கண்டர்கள்-வல்லாளர்கள் அவர்கள். தரம்தாழ்ந்த ஒருபொருளைத் தரம் கொண்டதாக மாற்றுவதில் இவர்கள் வல்லவர்கள். உயர்ந்த பொருளாக ஆக்கவேண்டிய பொருளை நுன்மைப்படுத்துவார்கள்;பின்மென்மைப்படுத்துவார்கள் உரிய திரவத்தில் மூழ்கடிப்பார்கள்; இதன்மூலம் அப்பொருளில் இருந்த மாசுகளை எல்லாம் தீர்த்து உயர்ந்த பொருள் ஆக்கி விடுவார்கள்.

இவர்களின் செயலைத்தான் அவனும் செய்தான். என் நெஞ்சக் கனகல்லை நுன்மைப்படுத்தினான்; பின்னர் கனியச் செய்தான்; மென்மைப்படுத்தினான்; தன்னிடம் மட்டுமே உள்ள ஆற்றல் வாய்ந்த ஒரு திரவத்தை - கருணை வெள்ளத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக ஊற்றவில்லை, அந்தத் திரவ வெள்ளத்தில் ஆம்! வெள்ளத்தளவுக்குத் திரவம் என் கல்மனத்தை மாற்றத் தேவைப்பட்டிருக்கும் போலும்- என்னை அப்படியே அமுத்தி வைத்தான்: அதுதன் வேலையை மிகச்சரியாகச் செய்தது; மன மாசுகளைஎல்லாம்-வினைகளைஎல்லாம் கடிந்தது.

தோழீ! இப்போது சொல். அவன் மறைகளை அருளிய வேதியனா? தாழ்ந்த ஒன்றினை உயர்ந்ததாக மாற்றும் பேராற்றல் வாய்ந்த கொண்ட எண்ணத்தைச் சாதித்தே தீரும்-வல்லாளனாகிய வேதிவினையாளா? நீ எப்படிச் சொன்னாலும் அதுபற்றி எனக்கு கவலையில்லை-ஏன் தெரியுமா? தாழ்ந்து கிடந்த என்னைத் தரம் உயர்த்தியவன் என்பதை ஒப்புக்கொண்டே தீருவாய் என்பது எனக்குத் தெரியும்.

ஒளிவீசி விரியும் உன்கண்களில் ''நாமும்'' தர முயர வேண்டும் என்கிற உன் எண்ணத்தைப் படித்துவிட்டேனடீ! கவலைப்படாதே. என்னைத் தில்லைக்கு வரச்சொல்லியிருக்கிறான். நீயும் வா. அங்குச் செல்லலாம்.

திகைக்காதே! தில்லைபெருநகரமாயிற்றே அங்கு அவனை எப்படித் தேடிக்கண்டுபிடிப்பது? என்று திகைக்கவேண்டா? தன் முகவரியை எனக்குத்தந்துதான் சென்றுள்ளான். சிற்றம்பலம் தான் அவன் நிலையான இருப்பிடம்-மன்னியஇடம்.

தோழீ தில்லையில் சிற்றம்பலம் எங்கே இருக்கிறது? என்று தேடித்திரிந்து அலையவேண்டுமே என்று எண்ணுகிறாயா? கவலைப்படுகிறாயா? கவலையைவிடு. நாம் அவனைத் தேடிச் செல்லவேண்டாம். திரிந்து அலையவேண்டாம். அவனை நாமிருக்கும் இடத்திற்கு வரச்செய்யலாம். அவனும் வருவான்; ''வருகுவன் என்ற கோனது பெருமையும் அது பழுதின்றி வந்தவன் அறிவும் வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்தன்றே'' என்று அன்றுஒரு சங்கப்புலவன் பாடினானே அதுபோல் இவன் வரவும் மெய்யாகும்.

சிற்றம்பலம்தான் வருவதுமட்டுமல்ல; விரைந்தும் வந்துசேர் வான். அவனிடம் அதற்கென்றே; அவனுக்கென்றே ஓர் ஊர்தியும் உள்ளது. அதுதான் விடை. அது நம் எருதுகளைப் போன்றதன்று அது அறத்தின் குறியீடு. மனத்தின் கடிது சொல்ல வல்லது ஒல்லை விடை அது.

வரும் வேகத்தைச் சொன்ன நான், அவன் வருகைக்காக என்ன செய்யவேண்டும்? வரவழைக்க முன்னேற்பாடுகள் என்ன? என்ன? என்ன செலவாகும் என்று எண்ணி, அவ்வளவு பெரியவனை அழைக்க நாம் கைமீறிச் செலவு செய்யவேண்டுமோ என்று கவலைப்படாதே தோழீ!

நாம் செய்யவேண்டுவது ஒன்றே ஒன்றுதான். அது செலவில்லாதது; பிறரிடம் கடன்வாங்க வேண்டுவதுமில்லை; கடன் வாங்கவும் முடியாது. அவனைப்பாடு, இனிய இசையில்தான் பாட வேண்டும் என்பதில்லை. உனக்கு எப்படிப் பாடத் தெரியுமோ அப்படிப்பாடு. அதுபோதும்; அதுவே வேண்டும்.

நான் பாடினால்தான் வருவான் என்று எண்ணாதே. நான் பாடினாலும் வருவான்; நீ பாடினாலும் வருவான்; யார் பாடினாலும் வருவான்.

அவனை இங்கு வரவழைக்க வேண்டும் என்கிற ஆசை உனக்கு மட்டுமல்ல; எனக்கும் உள்ளது. இங்குள்ள நம் எல்லார்க்கும் உள்ளது. எல்லாரும் சேர்ந்து பாடுதும்-பாடுவோம். அவனை வரவழைப்போம். எல்லாரும் தரத்தில் உயர்வு பெறுவோம்.

''கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்ப்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதும்காண் அம்மானாய்''

-திருவம்மானை-5

திருச்சிற்றம்பலம்

---

## கல்வி

கல்வியே மனிதனை ஆற்றல் மிக்குடையவனாக ஆக்குகிறது. கல்வியே ஒழுக்கத்திற்கு ஊற்று. பண்புகளுக்கு வாயில். நாடு முழுவதும் கல்வி பரவுதல் வேண்டும். கல்வியே மனிதனுக்கும் பாதுகாப்பு; நாட்டுக்கும் பாதுகாப்பு.

—அருள் நெறித்தந்தை
(சிந்தனைச்சோலை-நூல்)

# சென்னை ஆழ்வார்கள் ஆய்வு மையம் பாராட்டு விழாவில் தவத்திரு பொன்னம்பல அடிகளார்

## ஆற்றிய உரை

நாள் : 20-08-2000

''முத்தியோ சிலரின் சொத்தென இருக்கையில்
இத்தமிழ்நாடு தன் இருந்தவப் பயனாய்
இராமானுஜனைப் பெற்றதன்றோ!''

என்ற ஆன்மிகத் தடத்தில் தமிழகத்தை இந்தியத் துணைக் கண்டத்தின் சமத்துவபுரமாக ஆக்கிக் கொண்டிருக்கிற அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களே! ஆழ்வார்கள் ஆய்வு மையத்தை, சிறப்புறத் தலைமை தாங்கி நடத்திக் கொண்டிருக்கிற அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய ஆர்.எம்.வீ. அவர்களே! அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய நாடாளுமன்ற உறுப்பினர் ஆழ்வார்கள் ஆய்வுமையத்தின் செயலர் அருமைக்குரிய ஜெகத்ரட்சகன் அவர்களே! இங்கு சிறந்த வாழ்த்துரையை நல்கி இருக்கிற, நல்க இருக்கிற அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய கல்வி அமைச்சர் அவர்களே! அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய அறிஞர்பெருந்தகை வா.செ. குழந்தைசாமி அவர்களே! மிகச் சிறப்பாக ''இராமானுஜர்'' விருதைப் பெற்றிருக்கிற ''பாரதரத்னா'', அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய டாக்டர் அப்துல்கலாம் அவர்களே!'அண்ணா' விருதை 99-ஆம் ஆண்டிற்குப் பெற்றிருக்கிற அன்பிற்குரிய முனைவர் செல்லப்பன் அவர்களே! அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய கணபதி ஸ்தபதி அவர்களே! அன்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய வலம்புரிஜான் அவர்களே! பெருமைக்கும் பாராட்டுதலுக்குமுரிய 'அருட்செல்வர்' மகாலிங்கம் அவர்களே! பெருமைக்குரிய எழுத்தாளர் பகீரதன் அவர்களே! அன்பிற்குரியஎழுத்தாளர் வல்லிக்கண்ணன் அவர்களே!பண்பிற்கும் பாராட்டுதலுக்குமுரிய பிரேமாநந்தகுமார் அவர்களே! அமைச்சர் பெருமக்களே! சட்டமன்ற உறுப்பினர் பெருமக்களே! பெரியோர் களே! சான்றோர்களே! நண்பர் வைரமுத்து அவர்களே! இந்த இனிய பொழுதில் ஆழ்வார்கள் ஆய்வு மையம், இந்தியத் துணைக் கண்டத்திற்குப் பெருமை தேடித்தந்த சான்றோர்களை பெருமைப் படுத்திக்கொண்டிருக்கின்ற இனிய சூழலில் ஆழ்வார்கள் ஆய்வு

மையத்தோடு சமய நல்லிணக்கத்தைக் கலந்த அந்த, உயிர்த் துடிப்போடு அவர்களை வாழ்த்தி விடைபெறுவதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றோம்.

இன்றைக்கு ஆழ்வார்கள் ஆய்வு மையத்தின் இராமானுஜர் விருதை, அண்ணா விருதை, கலைஞர் விருதை அருமைக்கும் பாராட்டுதலுக்குமுரிய முதல்வர் அவர்கள் தருகிறார்கள். ஆனால், மேடையில் இன்றைக்கு விருதுபெறுகிற சான்றோர்கள் இந்திய துணைக்கண்டத்தால் அடையாளம் காட்டப்பட்டவர்கள்! இல்லை, சிலர் இந்தியத்துணைக்கண்டத்தையே உலகத்திற்கு அடையாளம் காட்டியவர்கள். ஆனால் இவர்கள் பெறுகிற விருதினை கலைஞர் அவர்கள் தருவதில்தான் ஒருதனிச்சிறப்பு இருக்கிறது. ஆழ்வார்கள் ஆய்வு மையத்தில் இராமகாதையைப் பற்றி சிந்திக்கவேண்டும்; சிந்தித்துத்தான் ஆகவேண்டும். நீதியரசர் இஸ்மாயில் அவர்கள் வருத்தப்பட மாட்டார்கள் என்று நம்புகின்றோம்.

அன்புக்குரியவர்களே! இராமனின் வெற்றி அறிவிக்கப்பெற்று விடுகிறது. அயோத்தியில் அவன் முடிசூட்டுவிழா நடைபெறுகிறது. அவன் வெற்றிக்கு ஆழமான காரணமானவர்களுக்குப் பரிசுகளை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறான். ஆனால் அவன் ஆழமான வெற்றியின் அடித்தளத்திற்குக் காரணமான ஒருவனுக்கு எந்தப் பரிசைத் தருவதென தடுமாறிப்போய் நிற்கின்றான், அந்த நடையில் நின்றுயர்நாயகன் எதைத் தருவது? ஓரமாக நிற்கின் றான் அனுமன். இராமனின் வெற்றிக்கு அஸ்திவாரமாக இருந்த அனுமன் ஓர் ஓரத்தில் நிற்கின்றான். அப்பொழுதுதான் நடையில் நின்றுயர் நாயகன் அறிவிக்கின்றான். நான் எடுத்திருக்கிற இந்தப் பிறவியில் இன்னொரு பெண்ணைத்தீண்டேன் என்றபெருமையைப் பெற்றிருக்கிறேன். சீதையைத் தவிர மற்றொரு பெண்ணை தீணடாத திருமேனி என்னுடைய திருமேனி. ஆனால் இந்தத் திருமேனியை தீண்டுகிற பெருமையை ஒருவன் பெறுவானே யானால் அது நீ ஒருவனாகத்தான் இருக்கமுடியும். அந்தப் பரிசை நீ பெற்றுக்கொள் என்று ஆஞ்சநேயனை அனுமனை மார்புறத் தழுவிக்கொள்வான். இராமனிடம் கிடைத்த பரிசுகளில் மிகஉயர்ந்த பரிசாக அனுமன் அதை எண்ணிக்கொள்கிறான். அதைப்போலத் தான் 'பத்மபூஷண்' விருது பெற்றவர்கள் ''பத்மவிபூஷண்'' விருது பெற்றவர்கள் ''சாகித்யா அகாடமி'' விருது பெற்றவர்கள். உலகத்திற்கு இந்தியத்திருநாட்டை அடையாளம் காட்டிப்பெருமை பெற்றவர்கள் இன்றைக்குப் பெருமை பெற்றிருக்கிறார்கள். கலைஞரின் கரத்தால் விருது பெற்றிருப்பது, இராமனை மார்புறத் தழுவி அனுமன் பெற்ற பெருமையை இன்றைக்கு இவர்கள் பெற்றிருக்கிறார்கள் என்ற உணர்ச்சி வெள்ளத்தில் இங்கு உரை யாற்றுவதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றோம்.

ஆழ்வார்கள் ஆய்வு மையம் மிகச் சிறப்பான பணியினை இன்றைக்கு ஆற்றியிருக்கிறது. அதுவும் இந்தியத் துணைக் கண்டத்தை உலகத்திற்கு மிக ஒப்பற்ற உயர்ந்த இடத்திற்கு ஏந்திப் பிடித்திருக்கிற அப்துல் கலாம் அவர்கள் 99ஆம் ஆண்டிற்கான இராமானுஜர் விருதைப் பெற்றிருக்கிறார். அன்பிற் குரியவர்களே! எண்ணிப்பார்க்க வேண்டும். மீண்டும் இராமன் கதைக்கே வருகிறேன். இராமனும் இலக்குவனும் மயங்கிக் கிடக் கிறார்கள். அவர்களைக் காப்பதற்கு வழியின்றித் தவித்துக் கொண்டிருக்கிற பொழுது சேதுக் கடற்கரையில் ஓர் உருவம் விசுவரூபம் எடுக்கிறது. அந்த உருவம் விசுவரூபம் எடுத்து சஞ்சீவி மலையைக் கொண்டுவந்து மூலிகை மலையைக் கொண்டுவந்து, இராமனுக்கு உணர்வை உயிர்ப்பிக்கிறது. அதைப்போல இந்தியத் துணைக்கண்டம் உலக வல்லரசுகளுக்கு இடையே அடையாளம் காணமுடியாமல் தவித்துக்கொண்டிருந்தபோது, அதை அடை யாளம் காட்டி ஒப்பற்ற இடத்தில் உயர்த்திப் பிடிப்பதற்கு அதே சேதுக் கடற்கரையில் ஓர் உருவம் விசுவரூபம் எடுத்திருக்கிறது. அதுதான் அன்பிற்குரிய அப்துல்கலாம் அவர்கள். அந்த அறிவியல் மாமேதையை ஆன்மிகத்தடத்தில் இருந்து வாழ்த்துவதற்கு நமக்கு என்ன உரிமை இருக்கிறது, ஆனாலும் அந்த அறிவியல் மாமேதை ஆன்மிகத்தை சிந்தித்தவர்; அறிவியல்மார்க்கத்தில் ஆன்மிகத்தைத் தேடுகின்ற அந்த மாமேதை தன்னுடைய மார்க்கத்திலும் வழுவாது நின்றவர். அந்த உரிமையும் உணர்வும் இருக்கிற அளவில்தான் அவரைப் பாராட்ட நாம் பெருமைப்படுகிறோம்.

''ஆன்மிகம் இல்லாத அறிவியல் முடத்தனமானது. அறிவியல் இல்லாத ஆன்மிகம் குருட்டுத்தனமானது'' என்பார்கள். அறிவியல் இல்லாத ஆன்மிகம் இந்த தேசத்தில் தெருக்கோடியில் இருக்கிற விநாயகரை எல்லாம் பால் குடிக்கச் செய்யும் விந்தையை, மண்ணை பொன்னாக்குகிற விந்தையைக் கடவுள் நம்பிக்கை என்று அறி விக்கும். அதைப்போலத்தான் ஆன்மிகம் இல்லாத அறிவியல் இந்த உலகத்தையே விலை பேசுகிற விஞ்ஞானிகளை உருவாக்கிவிடும் எந்த நேரத்திலும் இந்த பூமிப்பந்தில் மூன்றாம் உலகப்போரைத் தோற்றுவித்துவிடும். அந்த நிலையில்தான் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப்போல் ஆன்மிகமும் அறிவியலும் இணைந்து பயணம் செய்யவேண்டிய காலக்கட்டாயத்தில் நின்று கொண்டிருக்கிறோம்.

சேதுக் கடற்கரையில் ஒரு சாமானியனாகப் பிறந்த அந்த மனிதனை எண்ணிப் பார்க்கிறோம். அந்த இஸ்லாம் சகோதரர் அவருடைய வாழ்க்கையின் தொடக்கத்திலேயே ஆன்மிகக் குடும்பத்தில் சகல சமயங்களோடு கலந்து வாழ்கிற வாழ்க்கையைப் பார்க்கமுடிகிறது. இலட்சுமண சாஸ்திரிகளின் மகன் அவருக்கு அருமைத் தோழனாக வருகிறார். அங்கே சமய மார்க்கத்திற்குள்

பேதத்திற்கு இடமே இல்லை. வகுப்பறையில்கூட இராமநாத சாஸ்திரி என்கிற ஒரு இந்துப் பிராமணக் குடும்பத்தைச் சேர்ந்த வரும் நம்முடைய அப்துல்கலாம் அவர்களும் அருகருகே இருந்து கற்கிறார்கள். அங்கேயும் சமய பேதமென்ற நச்சுவிதை விதைக்கப் படுகிறது. ஆனால் அங்கே இருக்கிற பெரியவர்கள் தட்டிக் கேட் கிறார்கள் இலட்சுமண சாஸ்திரி தட்டிக்கேட்கிறார். அப்துல் கலாமின் தந்தை தட்டிக்கேட்கிறார். ஆக, அங்கே சமய நல்லிணக் கத்தை அந்த ஊருக்குள்ளேயே உருவாக்கி விடுகிறார்கள். அங்கே மண்டைக்காடு உருவாகவில்லை. அங்கு வாழ்ந்த மக்கள் மனித நேயத்தை ஒருவருக்கொருவர் உருவாக்கி வளர்ந்தார்கள். அதைத் தான் இன்றைக்கு நம்முடைய முதல்வர் கலைஞர் அவர்களும் விரும் புகிறார்கள் இன்றைக்கு நம்முடையகிராமத்தில் பட்டிதொட்டிகளில் வாழ்கிற ஊர்ப் பெரியவர்கள் கிராமசபைகள் மூலம் தங்கள் ஊர் அமைதியை கட்டிக்காக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள் அந்த விருப்பத்தை வளர்க்க வேண்டியது இன்றைய நாட்டின் போக்காகும். ஆக நிறைய செய்திகளை நம்முடைய விஞ்ஞானப் பெருந்தகை அப்துல்கலாம் அவர்களைப் பற்றிக் குறிப்பிடலாம்,

மிகச் சிறப்பான செய்தியை நம்முடைய சகோதரி அவர்கள் தெரிவித்தார்கள் அவர்கள் எழுதிய ஆய்வுக்கட்டுரையை "சொந்த விமானத்தை நாமே உருவாக்குவோம்" என்ற ஆய்வுக்கட்டுரையை தாய்மொழித் தமிழில் தந்தார்கள். இந்த மேடையில் நாம் பெருமை யோடு கூறிக்கொள்ளலாம். அப்துல்கலாம் அவர்களாக இருந்தாலும் சரி, அருட்செல்வராக இருந்தாலும் சரி, இல்லை அன்புக்குரிய வலம்புரிஜான் அவர்களாக இருந்தாலும் சரி, இன்றைக்கு உலக அரங்கத்தில் பெருமைப்பட்டுக்கொண்டிருப்பவர்கள், பெருமையாகப் போற்றற்குரியவர்கள்! ஆனால் இவர்கள் அனைவரும் தங்கள் தொடக்கக் கல்வியைத் தாய்மொழி தமிழில்தான் கற்றிருக்கிறார்கள் என்ற உண்மையை நாம் மறுதலிக்கமுடியாது. ஆழ்வார்களும், அடியார் பெருமக்களும், அறுபான்மும்மை நாயன்மார்களும் தமிழில் தான் இறைவனை அடையமுடியும் என்று உலகிற்கு அறிவித் தார்கள். ஆனால் இன்றைக்கு அந்த அருமைத் தமிழ் மொழியைத் தான் ஆலயத்தில் நுழைய வைக்கமுடியாமல் நாம் தடுமாறிக் கொண்டிருக்கிறோம். நான் வேதனையோடு கூறிக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த மண்ணில் ஹீப்ரு மொழியில் போதனைகளைத் தந்தவர் ஏசுபெருமான் ஆனால் அவர் சென்னை கிறித்துவ தேவாலயத்தில் நிகழும் தமிழ் வழிபாட்டைப் புரிந்துகொள்கிறார். ஆனால் அங்கயற் கண்ணி ஆலயத்தில் நக்கீரனோடு வாதாடிய நம் தமிழ்ப்புலவன் சிவபெருமானுக்குத் தமிழ் புரியாது என்று சிலர் சொல்வதுதான்

நமக்கே புரியாத புதிராக இருக்கிறது. விளங்காத விடுகதையாக இருக்கிறது ஆனால், அறிவியல் கூடத்தில் என் அருமைத் தமிழ் மொழி அன்னியப்பட்டுவிடக்கூடாது என்று சொந்த விமானத்தை நம்முடைய நாட்டில் உருவாக்குவோம் என்று தாய்மொழியில் அருமையான கட்டுரையைப் படித்தார்கள்.

இன்றைக்குக்கூட சிலர் கூறுகிறார்கள் குழந்தைகளின் கல்வியைத் தீர்மானிப்பவர்கள் பெற்றோர்கள் என்று. அருமைக் குரியவர்களே! அறிஞர் பெருமக்கள் வந்திருக்கிறார்கள். முதலமைச்சர் தலைமையில் நாம் சிந்திக்கக் கடப்பாடுடையவர் களாக இருக்கிறோம். இந்த நாட்டில் குழந்தைகளின் எதிர் காலத்தைத் தீர்மானிக்கிற பெற்றோர்கள் யார்? அன்புகூர்ந்து சிந்தித்துப் பார்க்கவேண்டும். தங்கள் குழந்தை கருக்கொள்ளும் முன்பே எந்தக் கல்விக்கூடத்தில் கற்க வைக்கலாம். எந்த மழலையர் பள்ளியில் சேர்க்கலாம், எந்தக் கல்லூரிக்கு அனுப்பி வைக்கலாம், எந்தப் பல்கலைக் கழகத்திற்கு அனுப்பிவைக்கலாம எந்த நாட்டிற்கு கடவுச்சீட்டுப் பெற்று எந்த தேசத்தின் குடிமகனாக ஆக்கிவிடலாம் என்ற கனவுகளைத் திட்டமிடுகிற பெற்றோர்கள் இருக்கிறார்கள். அவர்கள் பெரும்பாலும் உயர் அதிகார வர்க்கத்தைச் சார்ந்த பெற்றோர்கள். இன்னும் சில பெற்றோர்கள் இருக்கிறார்கள், அவர்கள் தங்கள்குழந்தைகளின் எதிர்காலம் என்பது, குழந்தைகளின் கல்வி என்பது அவர்களுக்குச் சமூக மரியாதை மட்டுமே ஆனால் கோடிக் கணக்கான பெற்றோர்கள் இருக்கிறார்கள் அவர்களுக்காகத்தான் நாம் கவலைப்படவேண்டியிருக்கிறது. எத்தனை வளர்ச்சித் திட்டங்கள் தீட்டியும் தங்கள் குழந்தைகள் கல்விக்கூடத்திற்குச் செல்வதைவிட கழனியில் ஆடு மாடு மேய்க்கச் செல்லலாம் என்று எண்ணுகிற பெற்றோர்கள் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள். அந்த பெற்றோர்களுக்காகத்தான் தாய்மொழி வழிக் கல்வி உலகத்தை இன்றைக்கு ஏந்திப்பிடித்துக் கொண்டிருக்கிறார் முத்தமிழறிஞர் முதல்வர் அவர்கள். அவர்கள் கூறுகிற செய்தி, கல்வி உலகத்தைப் பொறுத்தவரை நம்முடைய ஆசிரியப் பெருமக்கள் கிராமப்புறத்தில் வாழ்கிற குழந்தைகளுக்கு வளர்ப்புத் தந்தைகளாக செயல்படவேண்டும் என்று சொல்கிறார்கள். அந்த நிலையை நோக்கி இன்றைக்குச் சிந்திக்கவேண்டியது கல்வி உலகத்தின் கடப்பாடு.

(தொடரும்)



# காலத்தால் அழியாத கருவூலமே...

(வே. சுகனேஸ்வரி, பிரான்மலை)

---

குன்றக்குடி வேலவனின் திருவருளால்-எங்கள்
குறைதீர்க்க அவதரித்த தவத்திருவே!
அவைதனை அலங்கரிக்கும் அறிவுச்சுடரே-நீர்
ஆன்மீகம் கற்பித்த அரும்மருந்தே!
தமிழுக்கு உயிர்தந்த தலைமகனே-என்றும்
தலைவணங்கும் தமிழகமே உம்மைக்கண்டு!
பட்டிமன்றம் படைத்திட்ட பாவலரே-நீர்
பாரினில் நீதிகாத்த காவலரே!
இருள்நீக்கி ஒளிதந்த இளம்பருதியே-நின்
இமைவிரித்த இடமெல்லாம் புனிதமே!
சமூக சிந்தனையின் சமுத்திரமே-நின்
சாரீரம் கேட்ட இடம் தமிழ்ச்சங்கமே!
மனிதநேயம் காத்திட்ட மாமனிதனே-நீர்
மானுடம் போற்றிடும் மாவீரனே!
காவியம் பொறித்திட்ட கலைமாமணியே-எங்கள்
கண்களில் நிறைந்துள்ள தமிழ்மாமணியே!
திருக்குறள் தீண்டாத கருத்தில்லை-என்றும்
திருமகன் நீபேசாத பேச்சில்லை!
பெண்ணிற்கு நடனம் கால்களிலே-நின்
நாவிற்கு நடனம் சொற்களிலே!
கலைமகள் குடிகொண்ட நின்நாவிலே-குறள்
விளையாடிய புதுமையோ நினைவிலே!
வானத்து வெண்ணிலவு காண்கையிலே-நின்
வளர்ந்த புகழெனக்கு நெஞ்சினிலே!
செவிக்கு விருந்தளித்த செம்மலே-நீர்
செந்தமிழ் வளர்த்திட்ட அண்ணலே!
உலகைவிட்டு மறைந்து போயிடினும்-எங்கள்
உள்ளம்விட்டு விலகாத இதயத்துடிப்பே!
காலத்தால் அழியாத கருவூலமே-உன்தன்
காலடியே எங்கள் உயிர்நாடியே!

# குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்
## குருபூசை விழா

**15—9—2000**

ஞானப்பெருங்குரவராகிய நமது ஆதீனக் குருமுதல்வரின் குருபூசை விழா விக்கிரம ஆண்டு ஆவணித்திங்கள் 30 ஆம் நாள் (வெள்ளிக்கிழமையன்று) சிறப்பாக நடைபெற்றது.

**கருத்தரங்கம்**

காலை நிகழ்ச்சியின் தொடக்கமாக ஆதீனப்புலவர், க. கதிரேசன் அவர்கள் வரவேற்புரையாற்ற, டாக்டர் கே. பால கிருஷ்ணன் அவர்கள், 'நாம் ஆண்டுதோறும் குருபூசை நடத்து கிறோம், ஆனால் ஒவ்வொரு ஆண்டும் ஆழமான கருத்துக்களை கொண்ட கருத்தரங்குகளையும், சிறப்புச் சொற்பொழிவுகளையும் நிகழ்த்துகிறோம்' என்று தொடக்கவுரை நிகழ்த்தினார்.

'பெரியபுராணப் பெண்மணிகளில் மும்மணிகள்' என்ற தலைப்பில் தமிழாகரர் தெ.முருகசாமி அவர்கள், 'திருஞானசம்பந்தப் பெருமான் சமயத்தைப் பாதுகாத்தாரா? சமுதாயத்தைப் பாதுகாத் தாரா? என்ற வினா எழும்போது நமது அருள்நெறித்தந்தை அவர்கள் பாண்டிநாட்டில் சமயத்தைப் பாதுகாக்கும் தொண்டே நிகழ்த்தினார்கள் என்று கூறினார்கள். மங்கையர்க்கரசியார், திலகவதியார், காரைக்கால் அம்மையார் இந்த மூன்று பெண்மணி களின் வாழ்க்கையின் அமைப்பு என்பது சைவ ஆகமத்துனுடைய அடித்தளமாக, எல்லா ஆடவர்க்கும் பெண்டிர் வெற்றியினுடைய பின்புலமாக இருப்பதைப் போல, எல்லா பெண்களுக்கும் ஆண் களும் வெற்றியினுடைய நிமித்தமாக, அவர்களும் அடித்தளமாக இருக்கவேண்டும் என்ற குறிப்பை உணர்த்தவே நமது சுவாமிகள் இந்த தலைப்பை எடுத்துக்கொடுத்திருக்கிறார்கள்' என்று தலைமையுரை நிகழ்த்தினார்.

''காரைக்காலம்மையார்'' என்ற தலைப்பில், தமிழாகரர், புலவர் மு. இராசரத்தினம் அவர்கள், சிவாலயங்களில் அருமையாக அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய திருவுருவச் சிலைகள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. ஒரே ஒருவர் மட்டும் அங்கே அமர்ந் திருக்கிறார் அப்படி அமர்ந்திருக்கின்ற ஒருவர் காரைக்கால் அம்மையார். மற்றவர்கள் எல்லாம் நின்று கொண்டிருக்க அவர் மட்டுமே அமர்ந்திருக்கிறார் என்று சொன்னால், நம்முடைய பெரியவர்கள் எவ்வளவு பெரிய பெருமையும் சிறப்பும் அந்த

அம்மைக்குத் தந்திருந்தால் அந்த உயர்ந்த இடத்தை அவர்கள் பெற்றிருக்கிறார்கள் என்பதைச் சற்று எண்ணிப்பார்க்க வேண்டும். உலகையே ஈன்ற பரம்பொருளாலே ''அம்மா'' ''அம்மா'' என்று அழைக்கப்பெற்றவர் காரைக்கால் அம்மையார் என்று கருத்துரை நிகழ்த்தினார்.

''திலகவதியார்'' என்ற தலைப்பில் தமிழாகரர் முனைவர் பழ. முத்தப்பன் அவர்கள் திலகவதியாரைப் பார்க்கின்றபோது, தமக்காக வாழ்ந்தவர், தம்பிக்காக வாழ்ந்தவர், அறனுக்காக வாழ்ந்தவர், சைவத்திற்காக வாழ்ந்தவர், இதுதான் திலகவதியார். நாவுக்கரசர் இன்றும் வாழ்கிறார் என்றால் அது திலகவதியாரின் கருணையால்தான். திலகவதியார் வேறல்ல, நாவுக்கரசர் வேறல்ல என்று கருத்துரை நிகழ்த்தினார்.

''மங்கையர்க்கரசியார்'' என்ற தலைப்பில் பேராசிரியர் நா. சுப்பிரமணியன் அவர்கள், ''நாயன்மார்கள் அத்தனை பேரும் சமமானவர்கள். நாம் ஒருவருடைய சிறப்பைச் சொல்லலாமே தவிர அந்தச் சிறப்புக்காக மற்றவர்களைக் குறைப்படுத்தக்கூடாது என்று பாலகவி அவர்கள் குறிப்பிடுவார்கள். ஆக குறைப்படுத்துவது அல்ல நமது நோக்கம் பெரியபுராணம் என்பது இந்த நாட்டினுடைய வாழ்க்கை முறையைக் காட்டுவதற்காக எழுந்த நூல். இலக்கிய வரலாற்றிலே பெரியபுராணத்தைச் சொல்லுகின்ற போது இது இந்த நாட்டினுடைய இல்லற வாழ்க்கையைக் காட்டுகின்ற காப்பியம் என்று குறிப்பிட்டுச் சொல்வார்கள். அப்படியானால், இந்த மூன்று பெண்மணிகளிலேயே இல்லற வாழ்க்கையிலே சிறப்புற வாழ்ந்த காரணத்தினால் மங்கையர்க்கரசியார் இறுதியாகச் சிந்திக்கப்படுகிறார் என்று சொன்னால் அது பொருத்தமாக இருக்கும் என்று கருத்துரை நிகழ்த்தினார்.

கருத்தரங்கின் நிறைவுரையாக தமிழாகரர் தெ. முருகசாமி அவர்கள், சுந்தரர் பாடிய திருத்தொண்டர் தொகையில் திலகவதியாருக்கு ஒரு இடமில்லாமல் போனது ஒரு பெரிய குறைதான், அதற்கு ஒரு சமாதானம்! தன்னைத்தானே பாடிக்கொள்வதா? என ''அவனாகவே அவனிருக்கிறான்'' என்பதற்காக ''வலைவீசிய படலத்தை'' உதாரணமாக கூறினேன். ஆனால் அதற்கு என்ன முழுமையான காரணம் என்ன என்பது தெரியவில்லை? என்று ஆய்வுப்பூர்வமான கருத்தரங்க நிறைவுரை நிகழ்த்தினார்.

## சிறப்புச் சொற்பொழிவு

மாலை நிகழ்ச்சியின் தொடக்கமாக, சொல்லின் செல்வர் சுகி. சிவம் அவர்கள் ''ஞானத்தவமுனிவர் வாகீசர்'' என்ற தலைப்பில், ஞானசம்பந்தப்பெருமான் மூன்று பேரை தமது

திருவாயினாலே தந்தை என்று குறிப்பிடுகிறார். தனது உடலுக்குத் தந்தையாக இருந்தவர் சிவபாத இருதயர். உயிர்வழித் தந்தையாக சிவபெருமானை ''அம்மையே அப்பா'' என்று அழைக்கிறார். தனது உள்ளத்துக்குத் தந்தையாக, 'அப்பரே' என்றழைத்து திருநாவுக்கரசு பெருமானை அறிவிக்கிறார். தனது உள்ளத்துக்கு இலட்சிய புருஷனாக வைத்துக்கொண்டது நாவுக்கரசு பெருமானை என்பதை மறந்துவிடக்கூடாது.

மனிதனை கஷ்டங்கள் உருவாக்குவதைப்போல நன்மைகள் உருவாக்குவதில்லை. கஷ்டம் வருகிறபோதுதான் நம்முடைய திறமையும் கடவுளின் கருணையும் புலப்படும். அனுபவங்கள் மனிதனை உண்டாக்குவதைப்போல புத்தகங்கள் உண்டாக்கு வதில்லை. அனுபவத்தின் பிழிவுதான் நாவுக்கரசரின் தேவாரமாகும் என்று சிறப்புச்சொற்பொழிவாற்றினார்.

பாராட்டுவிழா

நமது குருமகாசந்நிதானம் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள், தொழிலதிபர் பழ. படிக்காசு அவர்களுக்கு ''அறமனச் செம்மல்'' என்னும் பட்டம் வழங்கி, இன்றைக்கு இலக்கிய உலகம் தரம்தாழ்ந்து போய்க்கொண்டிருக்கிற போது பட்டிமன்றங்கள் பாட்டுமன்றங்களாகப் போய்க்கொண்டிருக்கிற சூழலில் தெருக்கூத்துக்கும் இன்றைய பட்டிமன்றத்திற்கும் வேறு பாடு இல்லா சூழலில் ஒரு கலவைக்கூட்டத்திற்கு நடுவே அப்பர் பெருமானைச் சிந்தித்திருக்கிறார்'' சுகி. சிவம் அவர்கள் எல்லோருக்கும் வாரி வழங்கிக் கொண்டிருக்கிற வள்ளல் பழ. படிக்காசு அவர்கள் சமயம் சார்ந்த ஆன்மிகத் துறையிலும் மிகச்சிறப்பாகவே பணியாற்றுகிறார் மேலும் மேலும் இவர் எல்லா நலன்களும் பெற்று பல்லாண்டு பல்லாண்டு வாழ வாழ்த்துகிறோம் என்று பாராட்டுரை வழங்கிச் சிறப்பித்தார்கள். அருள்திரு கோவிந்தானந்தா சுவாமிகள் அவர்களும், மத்திய மின்வேதியியல் ஆய்வக இயக்குநர் முனைவர் மீ. இராகவன் அவர்களும் பாராட்டுரை வழங்கினார்கள். ஆசிரியர் எஸ். முத்துராமலிங்கம் அவர்களின் நன்றியுரையுடன் விழா இனிதே நிறைவெய்தியது.

இரவு 7-00 மணியளவில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவீற்றிருந்து அன்பர்களுக்கு அருள்பாலித்தார்கள்.

—பாரதிவீரமுத்து



உ
சிவமயம்



தஞ்சையின் புகழ்மிகு ஜவுளிமாளிகை

# மஹாராஜா

சில்க்ஹவுஸ் : ரெடிமேட்ஸ்

தஞ்சாவூர்



 ரூ. 3.50/-






பெறுநர் திரு. கலாநாத் நா. மீனவன் (Adv)
24. மா. இராமசாமி செட்டியார் வீதி
காரைக்குடி - 630 001.